2 பக்கங்கள் 15 காசுகள்

பதிவு எண் எம்: 8798

# தீக்கதிர்

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சி [மார்க்சிஸ்ட்] நாளிதழ்

கதிர் 13 மதுரை 14-12-75 ஞாயிறு மலர் 264

### தாய்லாந்தில் எஞ்சியிருக்கும் 16,000 அமெரிக்க துருப்புகள் மார்ச்சில் வாபசாகும்

பாங்காக், டிச. 12—

தாய்லாந்தில் உள்ள தனது இராணுவ தளத்தை அமெரிக்கா வாபஸ் பெற்று வருவது தெரிந்ததே. அங்கு கடைசியாக எஞ்சியுள்ள 16 ஆயிரம் துருப்புகளும் 1976 மார்ச் மாத வாக்கில் அமெரிக்கா வாபஸ் பெறும். கடந்த 11ந் தேதி இங்குள்ள ரோட்டரி கிளப்டின்றில் பேசும்போது அமெரிக்க தூதர் சார்லஸ் ஒயிட் ஹவுஸ் தெரிவித்தார்.

ஆனால் இராணுவ உதவிக் குழு ஒன்றை மட்டும் தாய்லாந்தில் அமெரிக்கா வைத்திருக்குமாம்.

### பாக். அரசை எதிர்த்து வக்கீல்கள் ஊர்வலம்

ராவல்பிண்டி, டிச. 12

பாகிஸ்தானில் கடந்த 10-ந்தேதி நாடு முழுவதும் உள்ள பல நகரங்களிலும் நூற்றுக்கணக்கான வழக்குரைஞர்கள் கண்டன ஊர்வலங்களை நடத்தினர். அண்மையில் பாகிஸ்தான் நாடாளுமன்றத்தில் நிறைவேற்றப்பட்ட அரசியல் சட்டத் திருத்தங்களை எதிர்க்கும் வாசகங்கள் பொருந்திய அட்டைகளைத் தாங்கிச் சென்றனர்.

இந்த அரசியல் சட்டதிருத்தங்கள் பிரஜா உரிமைகளையும் நீதித்துறை சுதந்திரத்தையும் பறிப்பவையாகும்.

லாகூரில் மட்டும் 600 பேர் ஊர்வலம் சென்றனர். மக்கள் கூட்டமாகச் செல்லக்கூடாது என்று நாடு முழுவதும் தடையுத்தரவு பிறப்பிக்கப்பட்டுள்ளதால், இவர்கள் தனித்தனியாக—இருவர் இருவராக நீண்ட இடைவெளி விட்டுச் சென்றனர்.

# இணைப்பு எதிர்ப்பு பிரச்னையில் மார்க்சிஸ்டுகளுக்கு அக்கறை உண்டு

## ஸ்தா. காங்கிரஸ் ஊழியர்களுக்கும் — அ.தி.மு.க. ஊழியர்களுக்கும்

# தோழர் பி. ராமமூர்த்தி வேண்டுகோள்

மதுரை, டிச. 12 —

"ஆளும் காங்கிரசுடன் இணைவதா, வேண்டாமா? என்ற பிரச்னை, காங்கிரஸ் கட்சியின் உள்பிரச்னை, இதில் உங்களுக்கு என்ன அக்கறை என்று எங்களைப் பார்த்துக் கேட்கிறார்கள் ஆளும் காங்கிரஸ் தலைவர்களும் இணைப்பு ஆதரவாளர்களும்.

எங்களுக்கு அக்கறை உண்டு இந்திராகாங்கிரஸ் கைபலப்படக் கூடாது என்பதில் எங்களுக்கு அக்கறை உண்டு.

நாட்டிலுள்ள கோடானு கோடிக்கணக்கான தொழிலாளர்களையும், படித்த நடுத்தரவர்க்க ஊழியர்களையும் வாட்டி வதக்கி கசக்கிப் பிழிகின்றது இந்திராகாங்கிரஸ். அப்படிப்பட்ட காங்கிரசின் கை பலப்படக் கூடாது என்பதில் எங்களுக்கு அக்கறை உண்டு.

உனக்கு என்ன அக்கறை என்று என்னைப் பார்த்துக் கேட்க, உனக்கு என்ன உரிமை என்று கேட்கிறேன்" என்று பலத்த ஆரவாரத்திற்கிடையே தோழர் பி. ராமமூர்த்தி கேட்டார்.

மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் சார்பில், மதுரை திலகர்திடலில், கடந்த 9-ந் தேதியன்று நடந்த மாபெரும் பொதுக் கூட்டத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் பொலிட்பீரோ உறுப்பினர் தோழர் பி. ராமமூர்த்தி பேசினார். இன்றைய அரசியல் நிலை குறித்து அவர் குறிப்பிட்டதாவது:—

### யார் பொறுப்பு?

'தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கத்தை ஒழிக்க வேண்டும் என்று கூறக்கூடாது என்கிறார் இந்திரா காந்தி.

அதில் என்ன தப்பு. பீகாரில் 3 ஆண்டுகளில் 3 மந்திரிசபைகள் மாறின. காங்கிரஸ் கட்சிக்குள்ளும் தகராறு. காங்கிரஸ் மந்திரிசபைக்குள்ளும் அடிதடி, அவன் லஞ்சம் வாங்கினான். இவன் ஊழல் செய்தான்' என்று இதனால் மக்களுக்குச் செய்யவேண்டிய நன்மைகள் எதையும் கவனிக்க முடியவில்லை.

இந்த நிலையில் மக்கள் முன்வந்து, இந்த சர்க்கார் ஒழியவேண்டும் என்று எதிர்ப்புத் தெரிவித்தனர். அதில் என்ன தப்பு?

குஜராத்திலும் காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே கலகம் வந்தது. அதனால்தான் அது கவிழ்ந்தது, அதற்கு எதிர்க்கட்சிகளா பொறுப்பு?

இப்பொழுது உத்தரப்பிரதேசிலும் காங்கிரஸ் மந்திரிசபை கவிழ்ந்து ஜனாதிபதி ஆட்சி ஏற்பட்டிருக்கிறது. காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே கலகம் ஏற்பட்டதினால் தான் இந்த நிலைமை ஏற்பட்டது. இதற்கும் எதிர்க்கட்சிகளா பொறுப்பு?

### என்ன பண்பாடு?

அதேசமயத்தில் 1959-ம் ஆண்டிலே, கேரளத்திலே ஒரேஒரு ஓட்டுமெஜாரிட்டியில் உறுதியாக ஆட்சி புரிந்து கொண்டிருந்த இ எம் எஸ் சர்க்காரைக் கவிழ்க்க, சட்ட விரோதமான நடவடிக்கைகளை அன்றைக்கு காங்கிரஸ் தலைவராக இருந்த திருமதி இந்திரா காந்தியே நேரில் சென்று தூண்டிவிடவில்லையா? தனியார் பள்ளி ஆசிரியர்களுக்கு சர்க்காரே நேரிடையாக சம்பளம் கொடுக்கும் கல்விச் சட்டத்தை எதிர்த்து, பள்ளிச்சொந்தக்காரர்கள் எதிர்ப்பு தெரிவித்தபோது, அதைப் பயன்படுத்திக்கொண்டு வகுப்புவாதிகளுடன் சேர்ந்து தகாதவழிகளைக் கையாண்டு விமோசன சமரம் நடத்தி அந்த ஆட்சியைக் கவிழ்த்தீர்களே, அதை என்ன பண்பாடு என்று கேட்கிறேன்.

தேர்ந்தெடுக்கப்பட்ட சர்க்காருக்கு எதிராக பேசவும் கூடாது என்றுதடுப்பது எந்த நீதியைச் சேர்ந்தது? ஆளும் கட்சியின் குற்றங்குறைகளை எடுத்துச்சொல்லி இயக்கம் நடத்துவதுதான் எதிர்க்கட்சிகளின் வேலை. இது சர்வசாதாரணமான உண்மை. இப்படித்தான் பிரிட்டனில்கன்சர்வேடிவ் சர்க்காரை எதிர்த்து தொழிற்கட்சி இயக்கம் நடத்துவதும்- தொழிற்கட்சி ஆட்சியிலிருக்கும்போது கன்சர்வேடிவ் கட்சி எதிர்ப்பதும் வழக்கமாக உள்ளது. இப்படித்தான் ஆஸ்திரேலியாவிலும் வேறுபல நாடுகளிலும் நடக்கிறது. இதைத்தான ஜனநாயகம் என்று கூறுகிறார்கள். [illegible] கூடாது என்று அவசரச்சட்டம்போடு[illegible] நியாயம்?

[illegible]ர்வமாக ஏற்படுத்தப்பட்டிருக்[illegible] மீது அதிருப்தி [illegible]உண்டாக்[illegible]

வருகிறது. ஆட்சிபுரியும் காலத்தில் ஆட்சியாளர்கள் செய்யக் கூடிய தவறுகளையும் குற்றங்களையும் மக்களிடம் சொன்னால், அதிருப்தி ஏற்படுத்துவதாக அர்த்தமாம்.

அப்படியானால்:

"நான் ஊழல் செய்வேன், நான் கொள்ளையடிப்பேன். நான் எதுவும் செய்வேன். நீ ஒன்றும் பேசக்கூடாது" என்று தானே அர்த்தம்?

குற்றம் குறைகளை எடுத்துச் சொல்லவும், தவறான ஆட்சியை மாற்றியமைக்கவும் தானே எதிர்க்கட்சி இருக்கிறது? இது தானே ஜனநாயகம்?

### 21-வது அம்சம்

ஏழைகளைப் பாதுகாக்கத்தான 20 அம்சத் திட்டம் என்று கூறிவிட்டு, 21வது அம்சத் திட்டமாக தேசவுடைமை ஆக்கமாட்டோம் என்று கூறிவிட்டார்கள்.

### பத்து நாட்களாவது பொறுத்திட வேண்டாமா?

இன்றைய தமிழ்நாட்டு நிலைமை என்ன?

அக்டோபர் 2-ம் தேதியன்று திடீரென்று காமராஜர் இறந்து போனார். அப்போது நான் காஷ்மீரில்—ஸ்ரீநகரில் இருந்தேன். செய்தி கிடைத்ததும் சென்னைக்குவர, விமானத்துக்கு முயற்சித்தேன் - விமானம்கிடைக்கவில்லை. ஆகவே, சென்னைக்கு வர முடியவில்லை.

இரவு 9-45 மணிக்கு டெலிவிஷனில் பார்த்தேன். கூட இருந்தவர்களிடமும் சொன்னேன். உடனே இந்திரா போவார் என்றேன். அதன் படியே போனார். சி. சுப்ரமண்யமும் போனார். அழுதார்கள். சுப்ரமண்யம் தூணில் முட்டி முட்டி அழுதார்.

மறுநாள காங்கிரஸ் காரியக்கமிட்டி கூட்டம் நடந்தது. அதில் காமராசரைப் பற்றி ஒன்றுமில்லை. "காமராசர் இருக்கும்போது எங்களுடன் இணைய விரும்பினார். அனைவரையும் அழைக்கிறோம் வாருங்கள்" என்று தீர்மானம் நிறைவேற்றினர். காமராசர் காலமாகி 10 நாள்கூட காத்திருக்கவில்லை. அதற்குள் வா வா என்கிறார்கள்.

மத்திய உள்துறை அமைச்சர் பிருமானந்தரெட்டியும், இணைப்புபற்றிபேச காமராஜர் விரும்பியதாக காமராசர் இறந்த மறுநாளே கூறினர்.

### முழுப் பொய்

இவையெல்லாம் முழுப்பொய்கள் காமராசர் இறந்துவிட்டார். இனிமேல் அவர் உயிரோடு வந்து சாட்சியமா சொல்லப் போகிறார் என்ற துணிச்சலில் தான் இவ்வாறு பொய்கள் சொல்லுகிறார்கள்.

இணைப்பு ஆதரவாளர்களின் செய்திகளை மட்டும் போடச் சொல்லியிருக்கிறார்கள். இணைப்பு எதிர்ப்புச் செய்திகளைப் போடக் கூடாது என்றும் தடுக்கப்பட்டிருக்கிறது. 'நவசக்தி'யை விலைக்கு வாங்கி விட்டார்கள்.

### எங்களுடனும்தான் பேசினார் காமராஜர்

"காமராஜர் சொன்னார், காமராஜர் சொன்னார்" என்று ஆளும் காங்கிரசுடன் இணையத் துடிப்பவர்கள் சொல்லிக் [illegible]கொண்டேயிருக்கிறார்கள். அவர்களுக்கு நான் சொல்லுகிறேன்: "காமராஜர் உங்களுடன்தான் பேசினாரா? என்னிடமும் பேசினார். சாவதற்கு இரண்டுநாட்களுக்கு முன், எங்கள் கட்சியின் தமிழகச் செயலாளர் தோழர் ஏ பாலசுப்ரமணியத்துடனும்தான் பேசினார். நானும் காமராஜரும் 1921 முதலே நண்பர்கள். அவர் உங்களிடம் சொல்லாததையெல்லாம் என்னிடம் சொன்னார். காமராஜரைப்புகழ்ந்து இன்று பேசும் பலதலைவர்களைப் பற்றி காமராஜர் என்ன மதிப்பு வைத்திருந்தார் என்பதைப் பற்றியும் எனக்குத் தெரியும். காமராஜரைப் பற்றி அந்தத் தலைவர்கள் என்ன மதிப்பு வைத்திருந்தார்கள் என்பதைப் பற்றியும் எனக்குத் தெரியும்.

நாட்டின்இன்றைய நிலைமைகள்பற்றி அவர் மிகவும் வருத்தப்பட்டு என்னிடம் சொன்னார். இரு கட்சிகளும் சேர்ந்து இயக்கம் நடத்துவது பற்றியும் பேசினோம்.

காமராசருடைய ஒப்புதலோடு ஜூலை மாதம் ஸ்தாபன காங்கிரஸ்காரியககமிட்டி "அவசரநிலை பிரகடனம் தேவையில்லையென்றும்— அதை மறுபரிசீலனை செய்ய வேண்டுமென்றும்" குறிப்பிட்டிருந்ததைப் பற்றி இணைப்பு ஆதரவாளர்கள் என்ன சொல்லுகிறார்கள்.

### போய்த் தொலையட்டும்

பழைய காங்கிரஸ் கட்சியிலிருந்து வெளியேறி, இணைய வேண்டுமென்று விரும்புகிறவர்கள் யார்? ஊழியர்களா? இல்லை.

அங்கேயுள்ள பூண்டிவாண்டையார்களும், கபிஸ்தலம் மூப்பனர்களும் பெரும் புள்ளிகளும் அவர்களை அண்டிக்கிடப்பவர்களும்தான இந்திராகாங்கிரசுக்குப் போக வேண்டுமென்று துடிக்கிறார்கள்.

போகிறவர்களெல்லாம் போய்த் தொலையட்டும் அவர்களெல்லாம் போனபிற்பாடு அந்தக் கட்சி உருப்படும்.

வாண்டையார்களும் மூப்பனர்களும் போய்விடுவதால் அந்தக் கட்சிக்கு எந்த விதமான நட்டமும் கிடையாது அதற்குப் பதிலாக லாபம்தான் கிடைக்கும்,

அந்தக்கட்சியின் வளர்ச்சியைத்தடுக்கும்இந்தத்தடைகள்எல்லாம்நீங்கிவிட்டால் நல்லது இப்போது அந்தக்கட்சியில இருப்பவர்கள் எல்லாம நிலச்சுவான்தார்கள் அல்ல சாதாரணமானவர்கள்தான்.

இவர்களெல்லாம் இணைப்பு வாதிகளின் குழப்படிப் பிரச்சாரத்துக்கு இரையாகி விடாமல், நாட்டின் நிலைமையை நன்கு சிந்தித்துப் பார்க்கவேண்டுமென்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

### அ தி மு க ஊழியர்களை ஆளும் காங்கிரசில் தள்ள எம். ஜி. ஆர். குழப்படி

அ தி மு க வின் இன்றைய போக்கு என்ன? அன்று திண்டுக்கல் நாடாளுமன்ற இடைத்தேர்தலின்போது, "ஊழல்கள் எங்கிருந்தாலும், அது மாநிலத்தில் இருந்தாலும் மத்திய அரசில் இருந்தாலும், அதை எதிர்ப்போம்" என்றார் எம் ஜி ஆர். எனவே அ தி மு க வுக்கு ஆதரவு கொடுத்தோம்.

இப்போது. எம் ஜி ஆர் அமெரிக்காவுக்குச் சென்றிருந்தபோது, அண்ணாயிஸம் என்றால் என்ன என்று நிருபர்கள் கேட்டபோது. "சோஷலிஸம், கம்யூனிஸம் காபிடலிஸம்—இம் மூன்றும் சேர்ந்துதான் அண்ணாயிஸம் என்று சொல்லியிருக்கிறார், மூன்றையும் போட்டுக் குழப்பிதான், பாசிஸத்தைக் கொண்டுவந்தார்கள். இதுதான் அண்ணாயிஸமா? ஆரம்பத்திலேயே தமிழ்நாட்டு மக்களிடம் சொல்லிவிடுவதுதானே "காங்கிரஸ்" என்று

படிப்படியாகக் குழப்பி - முன்னுக்குப் பின்முரணாகப்பேசி — கடைசியில் இந்திரா காங்கிரசில் அ தி மு க ஊழியர்களைத் தள்ளப் பார்க்கிறார் எம் ஜி ஆர் இதைப் பற்றி அ தி மு க ஊழியர்கள் சிந்தித்துப்பார்த்து எச்சரிக்கையோடு இருக்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன்.

### எதுவும் நடக்கும்

இன்னும் மூன்று மாதங்களில் என்ன நடக்கும் என்று திட்டவட்டமாகச் சொல்ல முடியாது. அரசியல் சட்டம் ஐந்து ஆண்டுகளுக்குஒருதடவை தேர்தல் வைக்க வேண்டும் என்கிறது.

தேர்தல் நடக்குமா, நடக்காதா என்பது எதைப் பொருத்து இருக்கிறது? இந்திராவின் இரகசியப் போலீசார் வந்து, இந்திராவிடம்சொன்னால்— அதைப் பொருத்து இருக்கிறது. வெற்றி பெற முடியுமென்றால் தேர்தல்; இல்லையென்றால் தேர்தல் இல்லை.

உத்தரப்பிரதேசம் போன்ற பெரிய மாநிலங்களில், காங்கிரஸ் கட்சிக்குள்ளேயே பெரும் தகராறு அவற்றையெல்லாம் தீர்ப்பதற்கு அவர்களுக்கு அவகாசம் தேவைப்படும்" என்று பேசி முடித்தார்.

### ரூ. 420—95 வசூல்

பொதுக்கூட்டத்தில, மதுரைநகர் கம்யூனிஸ்ட் கட்சி செயலாளர் தோழர் வி. கார்மேகமும் பேசினார். மதுரை தாலுகா விவசாயச் சங்கச் செயலாளர் தோழர் கே சுப்பையா தலைமைவகித்தார்

இக்கூட்டத்தில் உண்டியல் மூலமும் மாலைகளாகவும் ரூ 420-95 வசூலாகியது.

### உத்தமபாளையம் தாலுகாவில்

# ரூ. 23 ஆயிரம் நிதி வசூல்

## பி. ராமமூர்த்தியிடம் வழங்கப்பட்டது

உத்தமபாளையம், டிச. 12—

மதுரை மாவட்டம் உத்தமபாளையம் தாலுகாவில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி வளர்ச்சி நிதிக்காக ரூ 23 ஆயிரத்துக்கு மேல் வழங்கப்பட்டது.

கடந்த 10ந் தேதியன்று, கட்சியின் அரசியல் தலைமைக் குழு உறுப்பினர் தோழர் பி. ராமமூர்த்தி உத்தமபாளையம் தாலுகாவில் சுற்றுப்பயணம் மேற்கொண்டபோது அவரிடம கட்சி நிதி வழங்கப்பட்டது. காமயககவுண்டன்பட்டி, கூடலூர், கம்பம் ஆகிய ஊர்களில் நடந்த பொதுக கூட்டங்களில் கலந்து கொண்டு இன்றைய அரசியல் நிலை குறித்து விளக்கவுரை ஆற்றினார். இன்றைய காலகட்டத்தில் அனைத்துப்பகுதி மக்களின் கடமைகளை உணர்த்தினார். ஒவ்வொரு கூட்டத்திலும் பல்லாயிரக்கணக்கான மக்கள் அணிதிரண்டு அவரது கருத்துரைகளை கவனமுடன் கேட்டுணர்ந்தனர்.

இதேபோல், மாநில செயற்குழு உறுப்பினர் தோழர் என் சங்கரய்யா கடந்த 10ந் தேதி போடியிலும் 11ந் தேதி உத்தமபாளையத்திலும் நடந்த நிதியளிப்புப் பொதுக்கூட்டங்களில்கலந்துகொண்டார். 5ந் தேதியன்று கோமபையில் நடந்த நிதியளிப்புப் பொதுக்கூட்டத்தில் மாநிலக் குழு உறுப்பினர் தோழர் என வரதராஜன் கலந்து கொண்டார்.

இந்தியப் பாட்டாளி வர்க்கத்தின் முன்னணிப் படையான மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கு உத்தமபாளையம் தாலுகா மக்கள் ஆர்வமுடன் முன்வந்து ரூ 23388—50 நிதி வழங்கினர்.

[நிதி வசூல் விவரம் நாளை]

### திருச்சியில்

# இருகாங். இணைப்புக்கு ஆயிரக்கணக்கான ஊழியர்கள் கடும் எதிர்ப்பு

திருச்சி, டிச. 12—

திருச்சியில் ஆயிரக்கணக்கான ஸ்தாபனக் காங்கிரஸ் ஊழியர்கள் இரு காங்கிரஸ் இணைப்புக்கு கடும் எதிர்ப்புத் தெரிவித்தனர்.

இக்கூட்டத்திற்கு வந்திருந்த ஊழியர்கள், அனைவரும், காலஞ்சென்ற காமராஜரின் இலட்சியத்தைப் பின்பற்றி தமிழ் நாட்டில் ஸ்தாபனக் காங்கிரஸ் செயல்பட வேண்டும் என்று கருத்துத் தெரிவித்தனர்.

கடந்த 11ந் தேதியன்று திருச்சி வந்த, ஸ்தாபனக் காங்கிரஸ் ஊழியர் களின் கருத்தறியும்குழுவிற்கு ஆயிரக்கணக்கான ஊழியர்கள் உற்சாக வரவேற்பு அளித்தனர். அன்று பிற்பகல் தேவர் ஹாலில் ஊழியர்கள் கூட்டம் நடந்தது.

ஹால் நிரம்பி வழிந்தது திரு பி. ரெங்கசாமிக்கோனார் தலைமை வகித்தார். ஸ்ரீரங்கம் நகரவைத் தலைவரும், திருச்சி மாவட்ட ஸ்தாபனக் காங்கிரஸ் அட்ஹாக் கமிட்டித்தலைவருமான திரு ஓய் வெங்கடேச தீட்சிதர் வரவேற்புரை நிகழ்த்தினார்.

ஸ்தாபனக் காங்கிரஸ் தலைவர் திரு பி ராமசந்திரன் பேசும்போது, கட்சியின் லட்சக்கணக்கான ஊழியர்களிடம்தான் காமராஜ் நம்பிக்கை வைத்திருந்தார் என்றும் தாம் காமராஜின் தொண்டர் என்பதால் தான் இங்கு இத்தகைய சிறப்பான வரவேற்புவழங்கப்பட்டதாகவும் குறிப்பிட்டார். தம்முடைய தலைமையில் தொடர்ந்து ஊழியர்கள் நம்பிக்கை வைத்திருப்பதைக் காண மகிழ்ச்சியடைவதாகவும் கூறினர்.

கட்சியின் பிப்ரவரி காரியக்கமிட்டிக் கூட்டத்தீர்மானத்தின் படியே ஸ்தாபனக காங்கிரஸ் நடக்கும் எனபதை ஊழியர்களுக்கு நினைவுபடுத்த விரும்புவதாகக் கூறினர்.

### ஸ்தாபன காங்கிரஸ் ஊழியர்களின் கருத்தாய்வுக் குழு இன்று மதுரை வருகிறது

மதுரை. டிச. 12—

தமிழக ஸ்தாபன காங்கிரஸ் ஊழியர்களின் கருத்தறியும் குழு இன்று(ஞாயிறு) மதுரை வருகிறது,

இன்று காலையில் மதுரை விமான நிலையத்தில் தமிழ்நாடு ஸ்தாபன காங்கிரஸ் தலைவர் திரு, பி. ராமச்சந்திரனுக்கும் மற்ற தலைவர்களுக்கும் ஸ்தாபன காங்கிரஸ் ஊழியர்கள் சிறப்பான வரவேற்பு அளிக்கிறார்கள். அதன் பின்பு தமுக்கம கலையரங்கில் நடக்கும் ஊழியர் கூட்டத்திலும் மாலையில திலகர் திடலில் நடக்கும் பொதுககூட்டத்திலும் அக்கட்சியின் தலைவர்கள் பேசுகிறார்கள்.

### பாரி தொழிலாளர் உதவி நிதி

அருப்புக்கோட்டை, டிச. 12—

ஆட்குறைப்பு, லே-ஆப் ஆகியவற்றை எதிர்த்து, 6 மாத காலம் தொடர்ந்து உறுதியாகப் போராடிய நெல்லிக்குப்பம் பாரி மிட்டாய்த் தொழிலாளர் உதவி நிதிக்காக—

அருப்புக்கோட்டை சோசலிஸ்ட வாலிபர் முன்னணி சார்பில் ரூபாய் 10 அனுப்பப்பட்டது.

### தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் சொத்துக்களை ஒப்படைக்கணுமாம்

## பக்தவச்சலம், தனுஷ்கோடி நாடார் ஐகோர்ட்டில் மனுதாக்கல்

சென்னை, டிச. 12—

தமிழ்நாடு ஸ்தாபனக் காங்கிரஸ் தலைவர் திரு பி ராமச்சந்திரன், தமிழ்நாடு காங்கிரஸ் கமிட்டியின் சொத்துக்களை நிர்வகிப்பதற்காக அமைக்கப்பட்டுள்ள டிரஸ்ட் குழுவின் உறுப்பினராக செயல்படக் கூடாது என்று அறிவிக்கக்கோரி இரு ரிட் மனுக்கள் சென்னை உயர் நீதி மன்றத்தில் தாக்கல் செய்யப்பட்டுள்ளன,

ஒன்றை முன்னாள் முதலமைச்சர் திரு பக்தவச்சலமும் மற்றொன்றை "நவசக்தி" ஆசிரியர் திரு எம் தனுஷ்கோடியும் தாக்கல் செய்துள்ளார்கள்.

திருச்சியில் இரு காங்கிரஸ் இணைப்பு ஆதரவாளர்கள் நடத்திய கூட்டத்திற்கு பிறகு, டிரஸ்ட் குழு உறுப்பினராக செயல்பட திரு ராமச்சந்திரனுக்கு உரிமை இல்லையாம்.

எனவே, அவர் டிரஸ்டின் கணக்குகளை வைத்திருப்பதற்கு தடை விதிக்க வேண்டுமாம். டிரஸ்ட் சொத்துக்களை இவ்விருவரிடமாவது அல்லது டிரஸ்ட் குழுவின வேறு உறுப்பினர் எவரிடமாவது ஒப்படைக்க வேண்டுமாம் இவ்வாறு அந்த மனுவில் திருவாளர்கள் பக்தவச்சலமும் தனுஷ்கோடி நாடாரும் கோரியுள்ளனா.

### கோம்பையில் கட்சி நிதி ரூபாய் 1001 வழங்கப்பட்டது

உத்தமபாளையம், டிச. 12—

உத்தமபாளையம் தாலுகா கோம்பையில், மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சிக்கு ரூ 1001 நிதிவழங்கப்பட்டது.

கடந்த 5-ந் தேதியன்று நடந்த இந்தநிதியளிப்பு விழா பொதுக்கூட்டத்துக்கு தோழர் எம். வெங்கிட சுப்ரமண்யன் தலைமைவகித்தார்.

தமிழ்நாடு விவசாயிகள் சங்க உதவிச் செயலாளர் என். வரதராஜன், திண்டுக்கல் எஸ். ஏ. தங்கராஜன், பி. பாண்டியன, ஏ. செலவராஜ் ஆகியோர் பேசினர்.

கட்சி நிதி ரூ 1001 ஐ, தோழர் கே. காசி, தோழர் என். வரதராஜனிடம் பலத்த கரவொலிக்கிடையே வழங்கினர்.

# தீக்கதிர்

## சிவகங்கை கல்லூரி ஆசிரியர்களின் நியாயமான போராட்டம்

இந்தியாவின் எதிர்காலம் ஆசிரியர்கள் கையில் என்பார்கள், ஆனால் இன்று பெரும்பாலான ஆசிரியர்களின் எதிர்காலம் தனியார் கல்வி நிலையங்களின் நிர்வாகிகள் கையில் உள்ளது.

நிகழ்காலமோ கல்லூரி வாயிலில்— அரசு அலுவலக வாயில்களில் பச்சையாகச் சொல்லப்போனால் நடுத்தெருவில். ஆம் அதற்கு அண்மைக்கால எடுத்துக்காட்டு கமுதி தேவர் கல்லூரி ஆசிரியர்களின் பிரச்னை இன்றைக்கு மற்றொன்று அதுதான் சிவகங்கையில் உள்ள மன்னர் துரைசிங்கம் நினைவுக் கல்லூரி ஆசிரியர்களது பிரச்னை.

கமுதி கல்லூரி ஆசிரியர்களின் பிரச்னை போன்றதே இக்கல்லூரி ஆசிரியர்களின் பிரச்னையும். இக்கல்லூரியில் கடந்த 4 மாத காலமாக கற்பிக்கும் ஆசிரியர்களுக்கு ஊதியம் வழங்கப்படவில்லை. ஒவ்வொரு மாதமும் பிறக்கிறது- ஆனால் இவர்களுக்கு மட்டும் பிறக்கவில்லை காரணம் அதுதான் ஊதியம் வழங்கப்படுவது இல்லையே.

எனவே செப்டம்பர் அக்டோபர் நவம்பர் ஆகிய மூன்று மாதம் பொறுத்திருந்த ஆசிரியர் பெருமக்கள் நவம்பர் மாத இறுதிவாரத்தில் கூடினர் தங்களுக்கு சம்பளபாக்கிகள் வழங்கக்கோரும் மனு ஒன்றைத்தயாரித்தனர். கல்லூரி முதல்வர் மூலமாக நிர்வாகத்துக்கு அனுப்பினர். மனுவைப் பெற்ற நிர்வாகம் செய்யவேண்டியது என்ன? கனிவோடு பார்த்து கனிவோடு அணுகி பிரச்னையைத் தீர்க்க அல்லவா முன்வரவேண்டும். மாறாக ஆசிரியர்களைப் பழிவாங்கி பணிய வைத்து விடலாம் என்ற இறுமாப்பில் ஐந்து பேராசிரியர்களை தற்காலிக வேலை நீக்கம் செய்தது. அவர்கள் புரிந்த குற்றம் பேராசிரியர்களை ஒருங்கு திரட்டி கோரிக்கை மனு தயாரிப்பதிலும் அதைச் சமர்ப்பிப்பதிலும் முன்னணியில்நின்ருர்களாம். இந்தஐவரில் ஒருவர் மதுரைப் பட்டதாரி ஆசிரியர் கழகத் தலைவர் திரு தர்மாராஜனும் மற்றும் நால்வரும் அக்கழகத்தின் முக்கிய நிர்வாகிகள் ஆவார்.

மோசமாக நிர்வகிக்கப்படும் தனியார் கல்லூரிகளை அரசு ஏற்று நடத்துவதற்கான அவசரச் சட்டத்தை இயற்றிய மாநில அரசு தனது ‘அன்புக்கரங்களை’ நீட்டுவதற்கு முன்பே அகங்காரத்தன்மை கொண்ட— அடக்குமுறை மனப்பான்மை கொண்ட நிர்வாகம் தனது இரும்புக் கரத்தை நீட்டி விட்டது-

நிர்வாகத்தின் இந்த வஞ்சகப்போக்கினை எதிர்த்து ஆசிரியர்கள் அனைவரும் டிசம்பர் 1ந் தேதி முதல் கல்லூரிக்குச் செல்லவில்லை வேலைநிறுத்தத்தில் ஈடுபட்டனர், 5 நாள் பார்த்தனர், நிர்வாகம் இறங்கி வருவதாக இல்லை, பல்கலைக் கழகமும் பாராமுகமாக இருந்தது எனவே கல்லூரி ஆசிரியர்கள் அனைவரும்-சுமார் 52 பேர்—6ந் தேதி முதல் கோட்டாட்சிததலைவர் அலுவலகம் முன்பு நாள்தோறும் காலை முதல் மாலைவரை பெருந்திரள் உண்ணாவிரதம் கிளர்ச்சியில் அமைதியாக இறங்கினர். தாங்களும் தங்கள் குடும்பத்தினரும் உண்ண வேண்டும் என்பதற்காக இந்த உண்ணாவிரதம் அதன் பின்பு பல்கலைக் கழகத்திலிருந்து இருவர் கொண்ட குழு ஒன்று சிவகங்கை சென்று வந்துள்ளது ஆசிரியர்களும் தமது உண்ணாவிரதத்தை முடித்துவிட்டு பல்கலைக்கழக துணைவேந்தரைச் சந்தித்து முறையிட்டுள்ளார்கள் குழுவின் அறிக்கை சமர்ப்பிக்கப்பட்டவுடன் தக்க நடவடிக்கை எடுப்பதாக துணைவேந்தரும் உறுதியளித்துள்ளாராம்,

அறிக்கையின் முடிவும் அதன்மீது பல்கலைக்கழகம் எடுக்கும் நடவடிக்கையும் எப்படியிருப்பினும், அது ஒருபுறம் இருக்கட்டும். ஆனால்— இவ்வாறு தனியார் கல்லூரிகளிலும் சரி—பள்ளிகளிலும் சரி, ஆசிரியர்களுக்கு மாதாமாதம் —முறையாக—உரிய—ஊதியம் கொடுக்காது— பல மாதங்களாக ஊதியம வழங்காது துயரத்தில் மூழ்கடிப்பது—இஷ்டம்போல் நன்கொடை என்ற பெயரால் பல்வேறு நிதிகள் வசூலிப்பது—விருப்பம்போல் கல்லூரிகளை மூடுவதும் திறப்பதும்— அதனால் மாணவர்களின் கலவி பாழடிக்கப்படுவது- ஆகியவை தொடர்கதையாக துயரக்கதையாக உள்ளது சுருங்கக்கூறின், அரசு அல்லது பல்கலைகழக மான்யக் குழுவிடமிருந்து சுமார் 80 சதவீதம் நிதியைப் பெறும் தனியார் கல்விக்கூடங்கள் வியாபார நோக்குடன் நடத்தப்படுகின்றன, லஞ்சமும் ஊழலும் மலிந்துகிடக்கும் இடமாகத் திகழ்கின்றன என்பது வெள்ளிடை மலை.

எனவே, தமிழக அரசு இதுகுறித்து ஒரு திட்டவட்டமான நடவடிக்கையை மேற்கொள்ள வேண்டும்

இந்நாட்டு மன்னர்களாம் மாணவர்களது கல்வியிலும், அறிவுக்கண் திறக்கும் ஆசான்களாம் ஆசிரியர்களது நலனிலும அக்கறை கொண்டுள்ள அரசு இது என்பது உண்மையானுல் அதற்காகத்தான், மோசமாக நிர்வகிக்கப்படும் தனியார் கல்லூரிகளை அரசேஏற்று நடத்தும் வகையில் அவசரச்சட்டம் கொண்டு வரப்பட்டுள்ளது என்பது உண்மையானுல்— முதல் நடவடிக்கையாக.அச்சட்டத்தை பயன்படுத்தி கமுதி தேவர் கல்லூரியையும். சிவகெங்கை மன்னர் துரைசிங்கம் நினைவுக்கல்லூரியையும் அரசு ஏற்று நடத்த முன்வரவேண்டும்.

இக்கோரிக்கையை வலியுறுத்தவும்பாதிக்கப்பட்ட கல்லூரி ஆசிரியர்களுக்கு ஆதரவளிக்கவும் அனைத்துப் பகுதி மக்களும் ஜனநாயக ஸ்தாபனங்களும் முன்வர வேண்டும்,

## விக்கிரமசிங்கபுரம் பக்கமுள்ள டாணவில்

21—12—75 இரவில்

தோழர்கள்

பி. சொரணம்

எஸ். ஆண்டி

எஸ். அழகு

சி. எஸ். வாசுதேவன்

பேசுவர்.

## புல்லுவிளையில் விவசாயிகள் சங்கம்

தக்கலை, டிச. 12—

குமரி மாவட்டம் புல்லுவிளையில் விவசாயிகள் சங்கம் அமைக்கப்பட்டது.இதற்கான அமைப்புக் கூட்டம் கடந்த 9-ந்தேதி தோழர் சி. சுந்தரம் தலைமையில் நடந்தது சங்கம் அமைக்க வேண்டியதன் அவசியம் குறித்தும்— அரசியல் நிலைகளை விளக்கியும் மாவட்ட விவசாயிகள் சங்கச் செயலாளர் தோழர் பி. திவாகரன் பேசிய பின்பு நிர்வாகிகள் தேர்ந்தெடுக்கப்பட்டனர்.

## பிரதமர் இந்திரா மகன் சஞ்சய் காந்திக்கு காங்கிரஸ் கட்சியில் பதவி

புதுடெல்லி, டிச. 11—

பிரதமர்இந்திரா காந்தியின் மூத்த மகன் சஞ்சய் காந்திக்கு இந்திரா காங்கிரஸ் கட்சியில் முக்கிய பதவி ஒன்று அளிக்கப்பட்டுள்ளது.

அகில இந்திய இந்திரா காங்கிரசின் ஒரு பிரிவான இளைஞர் காங்கிரசின் தேசியக் கவுன்சில் உறுப்பினராக சஞ்சய்காந்தி தேர்ந்தெடுக்கப்பட்டுள்ளார். தேசியக் கவுன்சில் என்பது இளைஞர் காங்கிரசின் கொள்கை நிர்ணயக் கமிட்டியாகும்.

தேசியக் கவுன் சில் உறுப்பினராக தேர்ந்தெடுக்கப் பட்டவுடன், இன்று மாலையில் நடந்த அக்கவுன்சில் கூட்டத்தில் கலந்து கொண்டு பேசவும் செய்தார். அவர் பேசும் போது. இளைஞர்காங்கிரசார் கிராமப் பகுதிகளில் கட்சியை வளர்க்க வேண்டும் என்று கூறினர்.

இக்கூட்டத்துக்கு, இளைஞர் காங்கிரஸ் தலைவர் திருமதி அம்பிகாசோனி தலைமைவகித்தார்.

### படிப்படியாக

மத்திய அரசாங்க மட்டத்திலோ — எந்த வொரு மாநில அரசாங்க மட்டத்திலோ-எந்தவொரு பதவியும் பொறுப்பும் வகிக்காத நபர் இந்த சஞ்சய்காந்தி. ஆனல் அவர் அரசாங்க மட்டத்தில் நிகழும் உயர்மட்ட ஆலோசனைக் கூட்டங்களில்- முக்கிய நிகழ்சிகளில்—முக்கியமான பாத்திரம் வகித்து வருகிருர்.

பீகார் மாநிலத்தில் அண்மையில் ஏற்பட்டபயங்கர வெள்ளக் கொடுமை ஏற்பட்டபோது — வெள்ள நிலவரம்சம்பந்தமாக அமைச்சர்களுடனும் மற்றும் அதிகாரிகளுடனும் சஞ்சய் காந்தி முக்கிய ஆலோசனை நடத்தினர் -அதன்பின் விமானததில் பறந்து சென்று வெள்ளப் பகுதிகளைச் சுற்றி பார்த்தார்.

அடுத்துகடந்த 3-ந்தேதியன்று பீகார் தலைநகரான பாட்னவில் மாநில முதலமைச்சர் ஜகந்நாத் மிஸ்ராவுடனும் பிரதேச காங்கிரஸ் தலைவர் சீதாராம கேசரியுடனும் மாநில தொழில்துறை உயர் அதிகாரிகளுடனும் மாநிலத்தின் பிரச்சினைகள் குறித்து விவாதித்தார்.

அதற்குமுன்னதாக,காலம் சென்ற இராஜேந்திரபிரசாத்தின் பிறந்த நாளையொட்டி, மாநில காங்கிரஸ் கட்சி அலுவலகத்தில் பிரசாத்தின் படத்துக்கு— அமைச்சர்கள் அதிகாரிகள், காங்கிரஸ்தலைவர்கள் புடை சூழ சஞ்சய் காந்தி மாலை அணிவித்தார்.

தவிர, புதுடெல்லியில் வீட்டு வசதி இலாகா சார்பில் நடந்த விழாவொன்றில் முக்கிய விருந்தினராகக் கலந்துக்கொண்டார்.

ஹைதராபாத்துக்கு அண்மையில் சஞ்சய் வந்திருந்தபோது அவரை முதலமைச்சர் வெங்கல்ராவ் மாலை அணிவித்து வரவேற்ருர்.

## சென்னிமலையில் 21—ந் தேதி வாலிபர் முன்னணிசார்பில் கருத்தரங்கு-கவியரங்கு-கலையரங்கு

சென்னிமலை, டிச. 12—

கோவை- நீலகிரிமாவட்ட சோசலிஸ்ட் வாலிபர் முன்னணியின் சார்பில் வருகிற 21-ந்தேதியன்று இங்குள்ள கொளாநல்லி திருமணமண்டபத்தில் அரசியல்-பொருளாதார கருத்தரங்கும் இலக்கியக்கருத்தரங்கும் - கலையரங்கும் நடைபெறவிருக்கிறது.

இதில் “இன்றைய அரசியல்நிலையில்-இளைஞர் கடமை குறித்து மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியின் மாநில செயற்குழு உறுப்பினர் என். சங்கரய்யாவும். “உலக முதலாளித்துவ நெருக்கடியும் இந்தியாவின் எதிர்காலமும்” என்பது பற்றி மைதிலி சிவராமனும், “சித்தர்களிலிருந்து பாரதிவரை” எனும் தலைப்பில் கவிஞர் கு சின்னப்பபாரதியுபி, ‘திரைப்பட பாடல்களும் கருத்துக்களும்’ என்பது பற்றி வழக்கறிஞர் நாமக்கல் சுப்ரமண்யமும், வாலிபர் முன்னணி ஸ்தாபனத்தின் வளர்ச்சியும் அனுபவங்களும் பற்றி கே. சி. கருணாகரனும் சொற்பொழிவாற்றுகிருர்கள்.

‘தீபமேபாறியே சீறிஎழு’ எனும் தலைப்பில் நடக்கும் கவியரங்கில் கவிஞர்கள் தணிகைச் செல்வன், வீரமாசக்தி, ப வேலுச்சாமி’ இரா கோமகன் ஆகியோர் பங்கேற்கிருர்கள்.

மற்றும ‘இரு உலகங்கள்’ படக்காட்சியும் பல்வேறு கிராமிய நிகழ்ச்சிகளும் இன்னிசைக் கச்சேரிகளும் இடம் பெறுகின்றன.

## சோசலிஸ்ட் வாலிபர் முன்னணி கிளை திறப்பு விழா

கோவை, டிச. 12—

கோவை — நீலகிரி மாவட்ட சோசலிஸ்ட் வாலிபர் முன்னணியின் கிளை திறப்புவிழா கண்ணப்பன் நகரில் கடந்த 7-ந் தேதி நடந்தது. வாலிபர் முன்னணிகொடியை மாவட்டச் செயலாளர் தோழர் கருணாகரன் ஏற்றிவைக்க, கிளை அலுவலகத்தை பொருளாளர் தோழர் பாலகிருஷ்ணனும், பெயர்ப்பலகையை துணைச் செயலாளர் மணியும் திறந்துவைத்தனர். பின்னர் தோழர் சிவசாமி தலைமையில் நடந்த பொதுக் கூட்டத்தில்பல தோழர்கள் பேசினர்.

தியாகி சிவராமன்கலைக் குழுவினரின் இன்னிசை நிகழ்ச்சி நடந்தது.

## சி ஐ டி யூ கொடியேற்றுவிழா

நாகர்கோவில், டிச, 11—

கன்னியாகுமரி மின் திட்டம் சுசீந்திரம் வருவாய் பிரிவு அலுவலகம் முன்பு கடந்த 9-ந் தேதி சி ஐ டி யூ கொடியை திட்ட சி ஐ டி யூ செயலாளர் தோழர் வி கணபதி ராமன் ஏற்றிவைத்தார். ஊதிய உயர்வு பிரச்னை குறித்தும், தொழிலாளர்களது ஒன்றுபட்ட இயக்கம் குறித்தும் பல தோழர்கள் பேசினர்.

## சிவந்திபுரத்தில் பிரச்சார பொதுக் கூட்டம்

விக்கிரமசிங்கபுரம், டிச. 12—

விக்கிரமசிங்கபுரத்துக்கு அருகில் உள்ள சிவந்திபுரத்தில் மார்க்சிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் பொதுக்கூட்டம் கடந்த 10-ந் தேதி நடந்தது. தாலுகா செயலாளர் எஸ். ஆண்டி தலைமை வகித்தார். மாவட்ட சி ஐ டி யூ தலைவர் பி. சொரணம், சி. என். வாசுதேவன் மற்றும் பலர் பேசினர்.

இறுதியில் மதுரை குமார் குழுவினரின் இன்னிசைக் கச்சேரி நடந்தது.

## ஆசிரியருக்கு...

## ஆலங்குளம் விவசாயிகள் பட்டினியிலிருந்து காப்பாற்றப்படுவார்களா?

ஐயா,

நெல்லை மாவட்டம், ஆலங்குளம் பஞ்சாயத்து யூனியன் பகுதியில கடந்த இரண்டு ஆண்டுகளாக, தொடர்ந்து மழை இல்லாததால விவசாயிகள மிகவும் கஷ்டப்பட்டு வருகிருர்கள். மேலும் இந்த பிசானம் பருவத்தில் விவசாயிகள் பருவ மழையை நம்பி கையில் இருந்த விதைகளையும், கடன் வாங்கியும், நாற்று பாவியும், விதைத்தும், நட்டும் உள்ளனர். இந்நிலையில் தொடர்ச்சியாக மழையில்லாததால் ஒரு குடம தண்ணீர்கூட பல கிராமங்களில் இல்லாமல மிகவும் கஷ்டப்படுகின்றனர். மாடுகளுக்கு தீவனம இல்லாததாலும், மாடுகளை விற்றும், பல்வேறு கடன் சுமைகளினுலும் ஒரு வேளை சாப்பாட்டுக்கும் மிகவும் கஷ்டப்பட்டு வருகின்றனர். விவசாயத் தொழிலாளர்கள் வேலையின்மையால் பட்டினி கிடக்கும் நிலை. பலர் வெளியூர் சென்றும் உள்ளனர்.

எனவே, நஞ்சை புஞ்சை நிலங்களுக்கு அரசு விதிக்கும வரி, பஞ்சாயத்து செஸ், முதலியனவற்றை ரத்துச் செய்தல், கூட்டுறவு சங்கக்கடன், நிலவள வங்கிக் கடன்களை ஒரு ஆண்டுக்கு வசூலிப்பதை ஒத்தி வைத்தல் செயற்கை மழைத் திட்டத்தை அமுல் படுத்தி தண்ணீர் கிடைக்கச் செய்தல் புதிய கிணறு வெட்டவும் பம்பு செட், விவசாய செலவுகளுக்கும தாராளமாகக் கடன் கிடைக்கச் செய்தல், புதிய பம்பு செட்டுகளுக்கும் ஏற்கெனவே விண்ணப்பித்த மனுதாரர்களுக்கும் விரைவில் மின்சாரம் அளித்தல், விவசாயிகள்,விவசாயத் தொழிலாளர் குடும்பங்களுக்கு வாரத்திற்கு 7 கிலோ அரிசி வீதம மலிவுவிலையில் வழங்க ஏற்பாடு வேண்டும.

விவசாயத் தொழிலாளர்களுக்கு வேலைவாய்ப்பு அளிக்கும் வகையில்வறட்சி நிவாரணநிதி அதிகம் ஒதுக்கி கிணறுதோண்டுதல், குளங்களை வெட்டுதல், இதர மராமத்து வேலைகள் செய்தல், சமுதாயக் கிணறுகள் தோண்டுதல் முதலிய வசதிகள் செய்து வேலை வாய்ப்பளித்தல் முதலிய நடவடிக்கைகளை மேற்கொள்ள வேண்டும்,

இக் கோரிக்கைகள் ஆலங்குளம் பஞ்சாயத்து யூனியன் பகுதி விவசாயிகளை வறுமையின்கொடுமையிலிருந்து காப்பாற்றஓரளவு உதவும்.

எனவே, மேற் குறிப்பிட்ட கோரிக்கைகளை நிறைவேற்றுமாறு தமிழக அரசையும் சம்பந்தப்பட்ட அதிகாரிகளையும கேட்டுக் கொள்கிறேன்,

இவண்,

ம. ராஜாங்கம்

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்)

ஆலங்குளம்வட்டாரக்கிளை.

## ஏழைகள் கையிலிருக்கும் நிலத்தை பிடுங்க முயற்சி 300 ஏக்கர் நிலம் வைத்துள்ள எம். ஏ. பட்டதாரியின் பேராசை

தக்கலை, டிச. 12—

குமரி மாவட்டம் ஆரூர் கிராமத்தில், 300ஏக்கர் நிலம் வைததுள்ள ஒருவர் மேலும் ஏழை விவசாயிகளின் கையில்உள்ள துண்டுதுக்காணி நிலத்தையும் அபகரிக்கும் முயற்சியில் ஈடுபட்டுள்ளதாகவும், இதற்காக அந்த ஏழைகளை அடித்துத் துன்புறுத்தும் வேலையிலும் இறங்கியிருப்பதாகவும் சொல்லப்படுகிறது. இது பற்றி கூறப்படுவதாவது:

ஆரூர் கிராம சர்வே எண் 7110-ல், யாக்கோபு, மோசை, அனஞ்சி, ஆசீர்வாதம், ஏசுதாஸ்,தரைசாமி, வேலப்பன்,கிருஷ்ணமூர்த்தி ஈஸ்வரபிள்ளை, பாலகிருஷ்ணன், மணி, கிருஷ்ணன் ஆகியோர் சர்வே எண் 7110-ல் உள்ள அரசுப் புறம் போக்கு நிலத்தில் பல ஆண்டுகாலமாக தென்னை. பலா போன்ற மரங்கள் நட்டு பிழைத்துவருகிருர்கள்.

இவர்கள் அனைவரையும் அந்த நிலத்திலிருந்து வெளியேற்றி விரட்டி விட்டு அந்த நிலத்தை அபகரிக்கும் முயற்சியில் வேணுகோபால் என்ற நபர் தீவிர முயற்சிகளில் ஈடுபட்டுள்ளாராம். இவர் பரசேரியைச் சேர்ந்தவர் என்றும், ஒரு எம். ஏ பட்டதாரி என்றும் சொல்லப்படுகிறது.

அரசுப்புறம்போக்கு நிலம் சுமார் 300 ஏக்கர்ஏற்கனவே அவர்கையில் இருக்கிறதாம். அதுவும் போதாது என்று பக்கத்தில் உள்ள விவசாயிகள் கையில் உள்ள அரசு புறம்போக்கு நிலத்தையும் எப்படியும் பிடுங்கிக்கொள்ள வேண்டும் என்று திட்டமிட்டு வேலை செய்து வருகிருராம்.

இதற்கு விவசாயிகள் சங்கத்தினர் எதிர்ப்புத் தெரிவித்தனர் என்பதற்காக, கடந்த 7ந் தேதி இரவில் விவசாயிகள் சங்கத் தோழர்கள் எம் மணி,இ மெய்யல்,ஆகிய இருவரும் கடுமையாகத் தாக்கப்பட்டனர். தவிர, இப்போது, விவசாயிகள் சங்கத் தோழர்களுக்கும் விவசாயிகளுக்கும் எதிராக ஆள் திரட்டும் வேலையும் நடந்து வருகிறதாம்.

இது சம்பந்தமாக போலீஸ் நிலையத்தில் புகார் செய்யப்பட்டுள்ளது.

## திருவனந்தபுரம் மாநகராட்சி கலைப்பு: மேயர் பத்மநாபன் பேட்டி

திருவனந்தபுரம்,டிச. 12—

ஒரு மார்க்சிஸ்ட்கட்சிக்காரன மேயராகத் தேர்ந்தெடுக்கப்பட்டான் என்பதைத்தவிர, திருவனந்தபுரம் மாநகராட்சியில் வேறொரு ‘குழப்பமும்’ ஏற்பட்டுவிடவில்லைஎன்றுதற்போது கலைக்கப்பட்ட அந்த மாநகராட்சியின் மேயராக இருந்த தோழர் எம் பி பத்மநாபன் கூறினர்.

கடந்த 9.ம் தேதி யன்று அவர் நிருபர்களுக்குப்பேட்டியளித்தார், பேட்டியளித்த போது அவர் மேலும் கூறியதாவது:

திருவனந்தபுரம் மாநகராட்சியின் பொருளாதார நிலைமை மோசமாக இருக்கிறது என்று அரசாங்கம கூறுவது சரியல்ல. கடந்த ஆண்டைக் காட்டிலும் அதன் பொருளாதார நிலை நன்ருகவே இருக்கிறது.

1972-ம் ஆண்டின் போது, மாநகராட்சியின் ஊழியர்களுக்கு 8ம் தேதிதான் சம்பளம கொடுக்கப்பட்டது. அவ்வளவு பெரிய மோசமான பொருளாதார நிலை மாநகராட்சிக்கு அன்று ஏற்பட்டிருந்தது ஆனல் இன்றைய நிலைமை அப்படியல்ல. மாநகராட்சியின் வருமானம் இரட்டிப்பாக பெருகியுள்ளது. ஒவ்வொரு மாதமும் வரி வகையில் 6 லட்சம ரூபாய் வருமானம் வருகிறது.

மாநகராட்சிக் கமிசனருடைய வஞ்சகத்தினல் குழப்பங்கள் உண்டாயின. கமிசனரை மாற்றவேண்டுமென்ற தீர்மானம் அக்டோபர் 18ந் தேதியன்று கவுன்சிலில் ஒருமனதாக நிறைவேறியது. 43 கவுன்சிலர்கள் அந்தக் கூட்டத்தில் கலந்து கொண்டனர். 40 பேர், கமிஷனரை மாற்றவேண்டுமென்று வாக்களித்தனர். அன்று முதல் கமிசனருக்கும மக்கள் பிரதிநிதிகளானகவுன்சிலர்களுக்குமிடையேயான உறவு சீர் குலைந்தது. இந்த நிகழ்ச்சிகளையெல்லாம முதலமைச்சருக்கு நான் தெரிவித்திருக்கிறேன்.

—இவ்வாறு கூறிய தோழர் பத்மநாபன் தொடர்ந்து கூறியதாவது:

நவம்பர் 13-ம் தேதியன்று நடந்த மேயர் தேர்தல் சட்டப்படியானதல்ல என்று அரசாங்கம் கூறுவதை மறுக்கிறேன். கவுன்சில் கூட்டத்தைக் கலைத்துவிட உதவி மேயருக்கு அதிகார மில்லை,

இந்தச் சமயத்தில் தோழர் பத்மநாபன் கோழிக்கோடு மாநகராட்சி சம்பந்தமாக அளிக்கப்பட்ட கோர்ட் தீர்ப்பு ஒன்றை சுட்டிக் காட்டினர்.

## சங்கரன்கோவிலில் வேலைப்பளுவை எதிர்த்து நெசவாளர்கள் கிளர்ச்சி

சங்கரன்கோவில், டிச. 12—

இங்குள்ளவெங்கடேஸ்வரா, சந்திரபாமா விசைத்தறி கம்பெனித் தொழிலாளர்கள் வேலைப் பளு திணிப்பை எதிர்த்து வேலைக்குச் செல்லாமல் போராடி வருகிருர்கள்,

54 ‘பிக்’குகள் ஓடிக் கொண்டிருந்த இந்தத் தறிகளில், டிச. 4-ந் தேதியிலிருந்து 56 பிக்குகளாக நிர்வாகங்கள் உயர்த்தின. அதற்கு ஏற்ப கூலியை உயர்த்தித்தர வேண்டும் என்று தொழிலாளர்கள் நிர்வாகத்திடம் கேட்டதற்கு கூலியை உயர்த்த முடியாது என்றும், எங்கள் இஷ்டத்துக்கு வேலை செய்வது என்ருல் செய்யுங்கள் இல்லாவிட்டால் வெளியே போங்கள் என்று கூறி கதவடைப்புச் செய்துவிட்டனர். நிர்வாகத்தினர் அதுவுமல்லாமல் தொழிலாளர்களை தரக் குறைவான வார்த்தைகளாலும் ஏசினராம்,

எனவே, தொழிலாளர்கள் ஒன்றுகூடி சி ஐ டி யூ வை அணுகினர். அதன் அடிப்படையில் மார்க்சிஸ்ட்கம்யூனிஸ்ட், ஸ்தாபனக் காங்கிரஸ், ஆளும்காங்கிரஸ், சோசலிஸ்ட் முதலியகட்சிகள் இப்பிரச்னைகுறித்து லேபர் ஆபீசருக்குதந்திகள்கொடுத்தன.

அதன் விளைவாக 7ந் தேதி பாளையங்கோட்டையில் நடந்த பேச்சுவார்த்தைக்கு நிர்வாகத்தினர்வந்து கலந்து கொள்ள வில்லை. 9-ந் தேதி லேபர் ஆபீசில் நடந்த பேச்சுவார்த்தையில் கூடுதல் கூலி தரமுடியாது என்று நிர்வாகம் மறுத்துவிட்டது. மீண்டும் வாய்தா போடப்பட்டுள்ளது. ஆனலும் தொழிலாளர்கள் வேலைக்குச் செல்லாமல் தொடர்ந்து போராடி வருகிருர்கள். இப்பிரச்னையில் சுமுக உடன்பாடு ஏற்படாவிடில், மற்ற பாக்டரிகளில் உள்ள தொழிலாளர்களும் போராட்டத்தில் இறங்குவது என்று முடிவு செய்துள்ளனர்.

## அரிஜனங்களுக்கு இடம் எடுத்து பல ஆண்டு ஆகியும் வீடு இன்னும் கட்டவில்லை

தக்கலை, டிச. 12—

குமரி மாவட்டம் பிரம்மபுரத்தில், விவசாயிகள் சங்கக் கமிட்டிக்கூட்டம் கடந்த 7-ந் தேதி நடந்தது. தோழர் பெருமாள்பிள்ளை தலைமை வகித்தார். மாவட்ட விவசாயிகள் சங்கச் செயலாளர் தோழர் பி திவாகரன் விளக்கவுரை ஆற்றினர்.

இவ்வூரில் விவசாயத் தொழிலாளர்களுக்கு (அரிஜனங்களுக்கு) வீடு கட்டுவதற்கு என்று இடம் எடுக்கப்பட்டு பல்லாண்டு காலம் ஆகியும் இதுவரை வீடு கட்டப்படவில்லை. அதற்கான முயற்சிகளும் இல்லை. எனவே, உடனடியாக அரிஜன விவசாயத் தொழிலாளர்களுக்கு வீடு கட்டித் தருமபடி சம்பந்தப்பட்ட அதிகாரிகளை இக்கூட்டம் வற்புறுத்தியது.

## சுப்ரீம் கோர்ட்டில் வழக்கு பாதுகாப்பு கைதிகள் ‘ஹாபியஸ் கார்பஸ்’ மனுப் போட்டு விடுதலை கோரலாமா? அரசியல் சட்டமேதிருத்தப்பட வேண்டுமா?

அரசாங்க உத்தரவின்படி விசாரணையின்றி பாதுகாப்புக் கைதிகளாக வைக்கப்பட்டிருப்பவர்கள். நமது நாட்டின் அரசியல் சட்டத்தின் 32-வது பிரிவுப்படி சுப்ரீம் கோர்ட்டிற்கோ 226வது பிரிவுப்படி மாநிலஉயர்நீதி மன்றத்திற்கோ “ஹாபியஸ் கார்பஸ்” என்ற மனுச் செய்து தங்களது விடுதலையைக் கோரலாம். சம்பந்தப்பட்ட கோர்ட்டு, அந்தப் பாதுகாப்புக்கைதியை விசாரணையின் போது, நேரில் கோர்ட்டிலேயே ஆஜர்படுததும்படி அரசாங்கத்துக்கு உத்தரவிடலாம்.

இப்போது அவசர நிலை அறிவிக்கப்பட்டு, பாதுகாப்புக் கைதிகள் யாரும் நீதி மன்றத்திற்கு போகக் கூடாதென அவசரச் சட்டமும் பிறப்பிக்கப்பட்டிருக்கிறது. எதற்காக சிறையில் வைக்கப்பட்டிருக்கிருர் என்ற காரணமும் அரசாங்கம் கூறத்தேவையில்லை.

இதனுல் அரசியல் சட்டத்தின் பிரிவுகள் 32-ம் 226-ம் இப்போது அமுலில்லை—, அவசரகால நிலை நீடிக்கும் வரை அவை ஒததிவைக்கப்பட்டிருக்கின்றன என்று அரசினர் கூறலாம.

பாதுகாப்புக் கைதிகளாக உள்ளவர்கள் சிலர் போட்ட ஹாபியஸ் கார்பஸ் மனுக்களில் இந்தப் பிரச்சினை கூர்மையாக விவாதத்திற்கு எழுந்துள்ளது.

அரசியல் சட்டத்தையே திருத்தாமல் பிரிவுகள் 32 ஐயும 226 ஐயும் நிறுத்தி வைக்க அரசாங்கத்திற்கு உரிமை கிடையாது என்று விடுதலை கோருபவர்களின வாதம். அவசரநிலைப் பிரகடனம அமுலிலிருககும் போது அரசியல் சட்டத்தை திருத்தாமலேயே மேற்கூறியபிரிவுகளை செயல்படாமல் நிறுத்தி வைக்கலாம் என்பது அரசினர் தரப்பு வாதம்.

இப்படி ஒரு வழக்கு மத்தியப்பிரதேச உயர்நீதிமன்றத்துக்கு வந்து அரசினர் வாதமஏற்றுககொள்ளப்பட்டு இப்போது வழக்கு சுப்ரீம் கோர்ட்டில் அப்பீலில் இருக்கிறது. பிரச்சினை மிகவும் முக்கியமானது. கடந்தகாலங்களிலெல்லாம் பாதுகாப்புக் கைதிகளாயிருந்தவர்கள் பலர் மாநில உயர்நீதி மன்றததிற்கோ சுப்ரீம் கோர்ட்டுக்கோ “ஹாபியஸ்கார்பஸ்” மனுபோட்டுவிடுதலைஆகியிருக்கிருர்கள். அரசியல் சட்டத்தையே திருததாமல் அதன் பிரிவுகள் 32, 226 ஐ ஏன் நிறுத்திவைககக் கூடாது என்ற பிரச்சினையை டிசம்பர் 15 ம தேதி சுப்ரீம் கோர்ட்டு விசாரித்து தீர்ப்புக்கூற இருக்கிறது. அரசினர் எடுத்துள்ள நிலைக்கு மாருன நிலையை சுப்ரீம் கோர்ட்டு எடுத்தால்சிறைப்பிடிக்கப்பட்டவர்கள் அனைவருக்கும் “ஹாபியஸ் கார்பஸ்” மனு உரிமை மீண்டும கிடைத்துவிடும. மிக முக்கியமானவிஷயமாக இருப்பதால் மத்திய சர்க்காரின் வக்கீலுக்குமட்டுமின்றி எல்லா மாநிலங்களின் சர்க்கார் வக்கீல்களையும் வாய்தாவுக்கு ஆஜராகும்படியும்— அனைவரின் வாதங்களையும் கேட்டு சுப்ரீம்கோர்ட்டு இறுதியில் தீர்ப்புகூற வேண்டும,பிரதமர் தேர்தல் வழக்குக்குப்பிறகு நாடுதழுவியமுறையில் மக்களின கவனத்தைஈர்த்துள்ள சுப்ரீம் கோர்ட்டுவழக்காக இதைக்கருதலாம.

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சி...

மாநிலக்குழு...

மாஸ் ரோ...